ஸம்ஸ்க்ருதஸ்ரீ:

# ॥ संस्कृतश्रीः ॥

संस्कृतविद्यासमिति पत्रिका



SAMSKRTASRĪ

ஸம்ஸ்க்ருதஸ்ரீ

A Fortnightly Bulletin of the Samskrit Education Society, Madras.




Annual Subscription Rs. 8-00

Single Copy 0-40 Ps.

Life Subscription Rs. 100-00

9, Single Mall Street, Tiruchirapalli-620 002.


माला—4 पुष्पम्—13


वाग्देव्यै नमः

माला सृणीपुस्तकपाशहस्तां
बालाम्बिकां श्रीललितां कुमारीम् ।
कुमारकामेश्वरकेलिलोलां
नमामि गौरीं नववर्षदेश्याम् ॥

" वनानि दहतो वह्नेः सखा भवति मारुतः ।
स एव दीपं शमयेत् कृशे कस्यास्ति सौहृदम् ॥ "

[காடுகளை எரிக்கின்ற நெருப்புக்கு காற்று தோழனாகின்றது. அந்தக் காற்றே தீபத்தை அணைக்கின்றது. இளைத்தவனிடம் யாருக்கு நட்பு இருக்கின்றது?]

श्रीगुरुभ्यो नमः

॥ संस्कृतश्रीः ॥

कलि 5082-दुर्मति-मेष-10 (4-13) 22—4—81

# எங்கு சென்றுகொண்டிருக்கின்றோம்?

நாள்தோறும் மனிதன் தன் ஆயுள்சக்ரத்தில் நகர்ந்து கொண்டிருக்கிறான். உலகும், அதிலுள்ள நாடுகளும், அவைகளிலுள்ள மக்களும் மாக்களும் நகர்ந்து சென்று கொண்டுதானிருக்கின்றனர். ஆனால் எப்படி? எவ்வழியில்? என்பதுதான் கேள்வி.

இவ்வுலகின் கண், சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன் அநேகமாக பெரும் பகுதியில் வைதிகதர்மத்தைப் பின்பற்றியவர்களே அதிகமிருந்தனர் எனக் கூறிடின் மிகையாகாது, மேற்கில் லதீன் அமெரிகா (Central America) முதல் கிழக்கே சீனு, ஜபான், கொரியா வரை, வடக்கே ஆர்டிக் ஸமுத்ரப் பகுதியிலுள்ள நார்வே முதல் தெற்கு ஸமுத்ரம் வரை வைதிக தர்மத்தின் சின்னங்கள் பரவலாகக் காணக்கிடைப்பதே முன் கூறப்பட்டதற்குச் சான்றாகும். வைதிக மதத்தில் ஸாமான்ய மனித தர்மங்கள் எனக் கூறப்படும் சிலவையே, பிற்காலத்தில் தோன்றி, பிரசாரமடைந்த பௌத்த, ஜைன, கிறிஸ்துவ, இஸ்லாம் போன்ற மதங்களில் முக்யமான மானிட தர்மங்களாகவுள்ளன.

பிறரை ஹிம்ஸிக்காதிருத்தல், உண்மை பேசுதல், திருடாமலிருத்தல், தூய்மை, (மனம், வாக்கு, உடல் முதலியவற்றில்) புலன்களையடக்கல் இவையே மானிடனின் பொது தர்மங்களாகக் குறிக்கப்படுகின்றன. வைதிக தர்மத்தின் பிறப்பிடமும் கேந்த்ரமுமான பாரத தேசத்தின் இன்றைய நிலை என்ன எனச் சிந்தித்துப் பார்த்தல் அவசியமாகும்.

நாள்தோறும் தினசரிப் பத்திரிகைகளை புரட்டிப் பார்க்கும் போது, மக்களின் கொலை, அஸத்யத்தின் தலைவிரிகோலம், ஓடும் ரயில் வண்டிகளில் கொலைகள், களவு, கற்பழிப்பு இவைகளைத்தான் அதிகம் காண்கிறோம். இவை எதைக் காட்டுகின்றன? மனத்தூய்மை, செயல் தூய்மை இவையெல்லாம் காற்றில் பறந்து விட்டன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் வட இந்தியாவின்

பெரும்பகுதியை யாண்ட சந்திரகுப்த மன்னனின் ஆட்சியில் உண வுப் பண்டங்களில் கலப்படம் செய்தவர்களுக்குக் கடுமையான தண் டனை விதிக்கப்பட்டு வந்ததன் காரணமாகக் கலப்படமே இல்லை, திருட்டு என்பது மிகக் குறைவு என வெளிநாட்டிலிருந்து வந்த மெகஸ்தனிஸின் குறிப்பில் காண்கின்றோம். தென்னாட்டில் மனுநீதிகண்ட சோழன் பசுவின் கன்றின்மீது தேரை ஓட்டிய மகனைக் கடுந் தண்டனைக்குள்ளாக்கினன். தன் அரண்மனையின் பக்கமாகச் சென்று கொண்டிருந்த வழிப்போக்கர் தாம் வசிக்கும் பகுதிகளில் கடும் வரட்சியைப் பற்றிப் பேசிக்கொண்டதைச் செவி யுற்ற ராஜேந்த்ர சோழன் மூன்று மாவட்டங்களுக்கு நீர்ப்பாசன வசதி தரக்கூடிய மாபெரும் ஏரி ஒன்றுக்கு, அன்றே திட்டமிட்டு, ஓராண்டில் வெட்டி முடித்து, வரட்சிப் பகுதிகளுக்குத் தண்ணீர் பாயும்படி ஏற்பாடு செய்தான்.

12-ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்து 18-ஆம் நூற்றாண் டின் பிற்பகுதி வரை வடமேற்கிலிருந்து வந்த அன்னியர்களின் ஆட்சியிலும், 19-ஆம் நூற்றாண்டிலும், பின்னர் 1947-ஆம் ஆண்டு வரை ஆங்கில ஆட்சியிலும் நாடு இருந்ததற்குக் காரணம் நாட்டு மக்களிடையே ஒற்றுமையுணர்ச்சியும், ஒருமைப்பாடுமில்லாததே எனச் சரித்ரக்காரர்களும். அரசியல்வாதிகளும் கூறுவதை ஏற்றுக் கொள்வோம். நாடு சுதந்திரமடையுமுன் சிறிது காலம் சுதந்திரப் போராட்டத்தின் காலத்தில் ஓரளவு மக்களிடையே ஒற்றுமை யுணர்ச்சி நிலவியது எனலாம். சுதந்திரம் பெற்று, நம்முடைய ஆட்சியே சென்ற 35 ஆண்டுகளாக நடந்து வருகின்றது. நாம் இன்று காணும் காட்சியைப் பற்றி வருந்தத்தான் வேண்டும்.

நாட்டில் மக்களிடையே ஒற்றுமை மனப்பான்மையை காண முடியவில்லை. பிராந்தீய வேற்றுமைகள், ஜாதி வேற்றுமைகள், இவை அதிகரித்து வருவது கண்கூடு. இவைகளுக்கு மேல் மனிதன் நிம்மதியாக வாழமுடியாத சூழ்நிலை. வயிற்றுக்கு வேண்டிய உணவு கிடைக்காத குறைபாடு. விலைவாசிகளின் எண்ணிப்பார்க்க முடியாத ஏற்றம். சர்க்கார் காரியாலயங்களில், உற்பத்தியைப் பெருக்கவேண்டிய தொழிற்சாலைகளில், சிறுவர்களிடையே அறி வைப் பெருக்க வேண்டிய ஸர்வகலாசாலைகள், கலாசாலைகள், பள்ளிகள் போன்ற எல்லா இடங்களிலும் அமைதியின்மை, வேலை நிறுத்தம், கக்ஷிச்சண்டைகள் ஆகியவற்றைத்தான் அதிகம் காண முடிகின்றது.

இத்தகைய சூழ்நிலை உருவாகி சில ஆண்டுகளுக்கு மேலாகி விட்டது யாரேனும் இதைப்பற்றிக் கவலைப்படுகின்றார்களா? "எப்படியோ போகட்டும். நாம் கவலைப்பட்டு நடக்கப்போவ

தென்ன?" என்று ஒவ்வொருவரும் நினைத்து வாளாவிருக்கின், நாட்டினகதி எனனவாகும்? 'பிற்காலச் சந்ததியார்,' 'பிற்காலத்தில் இந்த நாட்டின் மன்னர்கள்' என்றெல்லாம் பறை சாற்றப்படுவோரின கதி என்னவாகும்? ஒவ்வொரு வீட்டிலும் கூட பெற்றோர்கள் தம் குழந்தைகளைப் பற்றி அதிகம் சிந்திக்கிறார்களா என ஐயம் ஏற்படுகிறது.

அரசாங்கம், அரசியல் கக்ஷிகள், பொதுமக்கள், படித்தவர்கள், படிக்காதவர்கள், ஆசிரியர்கள், சிந்தனையாளர்கள் — யாவருமே கவலையுடன் சூழ்நிலையை நோக்குதல் அவசியம். இத்தகைய வருநதத்தக்க, அமைதியறற சூழ்நிலை தானாகவே புயல் போன்று உருவாகியுள்ளதா? இலலை! நிச்சயமாக இல்லை! நம்முடைய குறைபாடுகளே இத்தகை சூழ்நிலையை உருவாக்கியது. நாடு சுதந்திரமடைந்தபின நாட்டின் நீண்டகால நன்மையைப்பற்றி யாருமே சிந்தித்ததாகத் தோன்றவில்லை. ஓட்டுகளை அதிகம் பெற்று அரசுக் கட்டிலில் அமர்வதை மட்டும் அரசியல் கக்ஷிகள் நோககாகக் கொள்ளாமல், பொதுமக்களின், அதிலும் நமது பின் தலைமுறைகளைப் பற்றிய கவலையுடன் — இளைஞாகளின கல்வி, பணபு, முன்னேற்றம ஆகியவற்றில் சிநதனையைத் திருப்ப வேண்டும. 'ஏட்டுச் சுரைக்காய் கறிககுதவாது' என்பது பழமொழி. நமது கலாசாரம் பண்பாடு முதலியவை உயர்ந்தவை என நமது அரசாங்கத்தை நடத்துபவர்களும், அரசியல்வாதிகளும் மேடைகளில் பேசுவது அதிகம் கேட்கப்படுகின்றது. ஆனால் இதுவரை நமது பண்பாட்டுப் பெருமைகளைப் பாமர மக்களும், நமது சிறுவர் சிறுமிகளும அறிநதுகொண்டு அவைகளின்படி நடககும்படி எனன ஏற்பாடுகள் கடநத சமீப காலத்தில் செய்யப்பட்டன? என்று கேட்டால் கையை விரிப்பதைத்தவிர வேறு பதிலிருக்க முடியாது.

வன்முறை, திருட்டு, பொய்பேசுதல், இவைகள் குற்றங்களாகவே நம் படித்த இளைஞர்கள் சிலரால கருதப்படுவதில்லை என்று கூறிடின மிகையாகாது. தூய்மை என்பது உடலைச் சோபபுத் தேயத்துக் குளித்து, சலவை செய்யப்பட்ட ஆடைகளை உடுத்துவதுடன் சரி என்ற எண்ணந்தான நிலவிவருகின்றது. புலனடக்கம் என்பதற்குப் பொருளே இல்லாது போய்விட்டது!

இத்தகைய பரிதாபகரமான சூழ்நிலையைப் பற்றி நாம் ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்க்கவேணடுமென்பது பிரார்த்தனை. அரசாங்கத்தை மாத்திரம் குறைகூறிப் பயனில்லை. மக்கள் அனைவரும் சிந்தித்து ஒருமையுடன் செயல்படின் அரசாங்கம் அதற்கு இடையூறு செய்யாது என்பது திண்ணம். முதலில் மக்கள் விழிப்புணர்ச்சி பெறவேண்டும். சிந்தனையாளரும், அனு

பவம் மிகுந்த நல்லாசிரியர்களும் அறிஞர்களும் ஒன்றுபட்டு நமது இளைஞர்களுடைய ஆத்மகுணங்களின் வளர்ச்சியை முக்யமான குறிக்கோளாகக் கொண்டு முதன்முதலாக ஆரம்பப்பள்ளி முதல் கல்லூரிவரைக்குமான புதிய பாடதிட்டங்களை உருவாக்க வேண்டும். அரசாங்கமும் கல்வியை ஒரு அரசியல் பிரச்னையாகக் கருதாது, முன் அரசாங்கம் செய்ததை மாற்றிவிடவேண்டும், நாம் புதிதாக ஏதேனும் ஒன்றைச் செய்யவேண்டுமென்ற எண்ணங்களில்லாது, பாடதிட்டங்களையமைப்பதில் சிறந்த அறிஞர்களின் "(உண்மையாக மக்களில் படித்தவர்களால்," சிறந்த அறிஞர்கள் எனப் போற்றப் படுபவர்களின்) ஆலோசனைகளை ஏற்று நடத்துவதுடன், கல்வியறிவில்லாதவரிடையே நம் சிறந்த பண்புகளை பரப்புவதில் முயற்சி எடுத்தும் நன்மை செய்வது நாட்டிற்கு நலன் பயக்கும்.

மக்களுக்குத்தான் இதில் அதிகப் பொறுப்பு இருக்கவேண்டும். சுயநலம் கருதுவதோடு, பிறர் நலம், இளைஞர்களின் நலம், பொதுவாக நாட்டின் நலத்திலும் சிறிது ஈடுபாடும் சிந்தனையும் அவசியம். பெற்றோர்கள் 'போகின்றபடி போகட்டும்' (Policy of drift) என்ற மனப்பான்மையின்றி தத்தம் குழந்தைகளிடையேயாயினும் இளம் வயதிலேயே நற்குணங்களும், பண்புகளும் வளர்ச்சி பெற முயல வேண்டும். இந்த பிரார்த்தனைகளனைத்தையும் பாரத மக்களின் முன் வைத்து வேண்டுகின்றோம்!

---

## FOOD FOR THOUGHT

"The Civilization of the future is perhaps not along the extreme technology of the West nor in the direction of the despotic Communism but in the hands of those whose traditions and spiritual insight can perhaps give a fresh turn to the wheel which shapes man's future".

— *Sir Alfred Eddington*

"The Catholic-minded Indian religious spirit is the way of salvation for human beings of all religions in an age in which we have to learn to live as a single family, if we are not to destroy ourselves". — *Dr. Arnold Toynbee*

"They also ruthlessly suppressed '*Chandogyo*' an indegenous Korean religion (perhaps based on one of the ten principal Upanishads—the Chandogyopanishad) which dwelt in the hearts of the Common people (of South Korea)".

— *Mr. Kang-Yang-UK*

(in 'Pictorial Korean News' of October 1976)

“ கொற்றச் சோழர் குடந்தை வைத்த
நாடுதரு நிதியுனுஞ் செறிய
அருங்கடம் படர்குவள் அறனில் யானே ”.

—அகநானூறு



உ

श्रीगुरुभ्यो नमः

# ॥ संस्कृतश्रीः ॥

पाठमाला अनुबन्धः ८१ பாடமாலா தொடர் 81

## द्व्युत्तरशततमः पाठः—பாடம் 102

## द्वन्द्वसमासः (தொடர்ச்சி)

4 बहुपद समाहारद्वन्द्वः

वीणा च वेणुश्च मृदंगश्च तेषां समाहारः वीणावेणुमृदंगं

रथाश्च गजाश्च तुरगाश्च पदातयश्च तेषां समाहारः

=रथगजतुरगपदाति ।

மேலே சொன்ன உதாரணங்களை நோக்கும் போது இதரேதரயோக—ஸமாஹார த்வந்துவ ஸமாஸங்களில் तयोः समाहारः तेषां समाहारः என்ற சொற்றொடரைத் தவிர மற்ற அம்சங்கள் ஒன்று போலுள்ளன. ஆனால் "இந்த வகையைச் சேர்ந்த சொற்கள் समाहारद्वन्द्व ஸமாஸத்தைத் தான் அடையும்" என்று ஒரு வரையறையுள்ளது. அவ்வகையைச்சேர்ந்த சொற்களை इतरेतरयोगद्वन्द्व समास மாக உபயோகப்படுத்துவது பிழையாகும்.

ஸமாஹாரத்துவந்துவ ஸமாஸமடையத் தகுதி பெற்ற சொற்களின் பட்டியல்

1. உடலுறுப்பைக் குறிக்கும் சொற்கள் :

कर्णौ च नासा च तेषां समाहारः कर्णनासं காதும் மூக்கும்

शिरश्च ग्रीवा च तयोः समाहारः शिरोग्रीवं

कटिश्च ऊरुश्च जंघा च तेषां समाहारः कटयुरुजंघम्

2. ஸங்கீதக்கருவிகள் :

घटः च वयोलिनश्च पटहश्च घटवयोलिनपटहम् ।
भेरी च काहलश्च तयोः समाहारः भेरीकाहलम् ॥

3. ஸேனையின் அங்கங்கள் :

नौकाश्च विमानानि च तेषां समाहारः नौकाविमानं
रथाश्च तुरगाश्च तेषां समाहारः रथतुरगं

4. பிராணிகளல்லாத ஜாதி வாசகச்சொற்கள் (Common Nouns)

दधि च क्षीरं च तयोः समाहारः
दधिक्षीरं தயிரும் பாலும்
क्षीरं च मधु च तयोः समाहारः
क्षीरमधु பாலும் தேனும்
आम्रं च पनसं च तयोः समाहारः
आम्रपनसं மாம்பழமும் பலாச்சுளையும்
गृहं च आपणश्च तयोः समाहारः
गृहापणं வீடும் கடையும்

ஆனால் இவை திரவ்யங்களைக் குறிக்கவேண்டும்.

5. வேறு லிங்கங்களிலுள்ள ஆறுகள்–நகரங்கள் (தேசப்பகுதிகள்)

काशी च प्रयागश्च तयोः समाहारः—काशीप्रयागं
देहली च नेपालश्च तयोः समाहारः—देहलीनेपालं
काशी च रामेश्वरं च तयोः समाहारः काशीरामेश्वरं
गङ्गा च शोणश्च तयोः समाहारः गङ्गाशोणं

6. அற்ப ஜந்துக்கள் (கீரியின் அளவுக்குக்குறைந்தவை)

यूका च अलिक्षा च तयोः समाहारः
यूकालिक्षं பேனும் உண்ணியும்
मशकाश्च मत्कुणाश्च तेषां समाहारः
मशकमत्कुणं கொசுவும் மூட்டைப்பூச்சியும்

(தொடரும்)

# FIFTY LIGHT YEARS IN INDIA

LUMINAIRES FACTORY, CALCUTTA

SON LAMPS
ARGENTA SUPERLUX

BOWL REFLECTOR LAMPS

ORTHO CYCLIC BALLAST

AIR HANDLING LUMINAIRES
PHOTOGRAPHIC LAMPS

1000W
HIGH PRESSURE
MERCURY VAPOUR
LAMPS

LIGHT FACTORY—KALWA
FLUORESCENT POWDER
DIAMOND DIES

LEADING IN WIRES

REFLECTOR LAMPS
HALOGEN LAMPS

TLF FLUORESCENT LAMPS
WITH BUILT IN REFLECTOR

BOMBAY LIGHT FACTORY
—MAZAGON

PREFOCUS
FLASHLIGHT
LAMPS

POLYESTER FILLED BALLASTS

BURNERS FOR
MERCURY
VAPOUR LAMPS

HIGH WATTAGE
COILED COIL LAMPS

MERCURY
VAPOUR LAMPS

FLUORESCENT STARTERS

TUNGSTEN COILS
MOLYBDENUM WIRES

LIGHTING FITTINGS

FLUORESCENT BALLASTS

LAMP HOLDERS
STARTER HOLDERS

1500W
INCANDESCENT
LAMPS

ARGENTA & 1000W
INCANDESCENT LAMPS

20W & 80W
FLUORESCENT LAMPS

DECORATIVE LAMPS

MINIATURE LAMPS

40W FLUORESCENT
LAMPS

GLASS SHELLS

200W-500W
INCANDESCENT

1940

FIRST INDIAN-MADE
PHILIPS LAMPS;
15W-150W INCAND..
TRAIN LUSTRE

COCOHEAD LAMPS




**PHILIPS**







# Our wide, wide range: It's only 50% of our story.

Yes. It's true that Colour-Chem offers you a wide range of pigments and dyes. Which covers a complete spectrum of shades—from yellow to black—for every product line. And which covers a variety of properties and price levels as well. To meet all your requirements.

And, what's more, this range keeps growing wider.

Yet, this is only 50% of our story...

The other 50% is the fact that our products are the result of world-class technology. And every batch is rigorously tested before it comes to you. To help you get good results. Batch after batch.

What's more, when dealing with us you get the benefit of our reliable technical service. Whether it's a question of assisting you with formulations and colour matching. Or helping you solve some tricky technical problem that threatens to disrupt your production.

These are the two halves of our story. And they add up to one thing: if you're in the market for pigments and dyes, your best bet is Colour-Chem.

Colour-Chem

COLOUR-CHEM LIMITED, 194, Churchgate Reclamation, Bombay 400 020

**Colour is the business of Colour-Chem**

कापि कापि महती तव चिन्ता मानसे भवति नूनमितीदम् ।
मञ्जुलस्य भवदीयमुखेन्दोर्म्लानिमैव मम सूचयतेऽयम् ॥

எங்கோ ஏதோ ஒரு பெருத்த கவலை உன் மனத்தில் நிச்சயமாக உள்ளதென்பதை அழகிய உன் முகத்தின் இந்த வாட்டமே எனக்குக் காட்டுகிறது. 17

धूलरेव तु कपोलयुगीयं चित्रकं कलितमत्र च लुप्तम् ।
अक्षिणी च कलुषे परिशुष्कं किं मनागधरपल्लवमेतत् ॥

இருகன்னங்களும் புழுதிபடிந்தது போல் உள்ளன. அங்கு எழுதிய வர்ணசித்திரம் அழிந்துள்ளது. கண்களும் கலங்கியுள்ளன. துளிர்போன்ற உதடும் வாடியுள்ளது. இது ஏன்? 18

न प्रसीदति तथा वदनाब्जं सर्वमङ्गमिदमन्यदिवास्ते ।
को नु वा किमकरोद्वद तत्त्वं सद्य एव रचये प्रतिकारम् ॥

தாமரை போன்ற முகம் மலர்ந்ததாக இல்லை. உடல் முழுவதுமே மாறுபட்டதுபோல் உள்ளது. யார் என்ன செய்தார்கள். உண்மையைக் கூறு. உடன் அதற்காக வேண்டியதைச் செய்கிறேன். 19

आदृगञ्जचिबुकं मलिनेयं रेखिका निपुणदर्शनदृश्या ।
सुन्दरे सुत मुखांबुरुहे ते बाष्पपातमुदितं मम वक्ति ॥

அழகான உன் முகத்தில் தாமரை போன்ற கண்களிலிருந்து கன்னமவரை அழுக்கடைந்து மங்கிய இந்தக் கோடு கூர்ந்து பார்த்தால் மட்டும் தெரிவதாயினும் கண்ணீர்ப பெருக்கு உண்டாயிருந்ததை எனக்கு உணர்த்துகிறது. 20

तात तावकमहो महिमानं केन वाऽस्यविदता परिभूतः ।
तावकीनपितरि ब्रुवती तत् साधु तं सपदि शिक्षयिताऽस्मि ॥

குழந்தாய்! உனது பெருமையை அறியாத எவனுல் நீ அவமதிக்கப்பட்டுள்ளாய். உன் தந்தையிடம் அதனைக் கூறி அவனை நன்கு உடன் தண்டிக்கச்செய்வேன். 21

जात जातुचन राजकुमारं को नु वाऽभिभवितुं क्षमते त्वाम् ।
कर्षतीह मुखजृम्भणकाले कः करेण खलु केसरिदंष्ट्राम् ॥

குழந்தாய்! அரசகுமாரனை உன்னை எவன் எதிர்த்திட முடியும்? கொட்டாவிவிடும் சமயத்தில் கையால் எவன் சிங்கத்தின் தெற்றிப் பல்லை இழுக்கிறன்? 22

वत्स कस्तव दृशावतिदीर्घे पद्मलक्षणयुतावपि पाणी ।
वीक्ष्य मूर्तिमपि वीक्षणरम्यां सार्वभौमतनयं तु न वेद ॥

குழந்தாய்! உனது மிகவும் நீண்ட கண்களையும் தாமரையின் அழகுகொண்ட கைகளையும் பார்க்கத் திகட்டாத உன் உருவத்தையும் கண்டு உன்னை அரசகுமாரன் என அறியாதவன் எவன்? 23

यः परैरहृदयंगमकार्ये चोदितोऽपि ननु नैव यतेथाः ।
तादृशस्य तव चेतसि को वा तात तापमिममीदृशमाधात् ॥

குழந்தாய்! பிறரால் மனத்திற்குப் பிடிக்காத செயலில் தூண்டப் பட்டாலும் அதனைச் செய்ய முயலாத உனது மனத்தில் யார் இத்தகைய தாபத்தை உண்டாக்கியது? 24

शैशवं हि भुवनेऽनपराद्धं सर्वतोऽपि विदितं सकलानाम् ।
बालतासहजचापलतस्त्वं मन्तुमानपि न नियन्तुमनर्हः ॥

பாலியப் பருவம் தவறுசெய்யாதது என எல்லோரும் எங்கு மறிந்ததே. பாலியத்தின் இயற்கையான சபலத் தன்மையால் தவறிழைத்திருந்தாலும் அவன் கட்டுப்படுத்தத் தகாதவனல்லவா? 25

कस्यचित्करगतं सुमनोज्ञं दुर्लभं क्वचन जातु विलोक्य ।
तत्र वत्स किमु कौतुकभारात्तावकं हृदयमीदृशमास्ते ॥

குழந்தாய்! யாரோ ஒருவனது கையிலுள்ள அழகிய கிடைக் காததொன்றை எப்போதோ கண்டு அதில் ஆவல் மிகுதியால் உன் மனம் இந்நிலையிலுள்ளதா? 26

सर्वराजमकुटीतटखेलच्छासनस्य पितुरंगभुवस्ते ।
भूतले ध्रुवमधोभुवने वा नाकसीम्नि च न दुर्लभमास्ते ॥

எல்லா அரசர்களது கிரீடத்திலும் விளையாடும் அதிகாரச் செல் வாக்குள்ள தந்தைக்குப் பிறந்த உனக்குப் பூமியிலோ, பாதாளத்திலோ, தேவலோக எல்லையிலோ கிடைப்பதற்கரியதொன்றில்லையே! 27

स्वप्रसादविकलं च निशान्ते शोचनीयदशमैन्दवबिम्बम् ।
शोभते न खलु तावकमन्तश्चिन्तया विधुरमाननमेतत् ॥

இரவின் இறுதியில் தன் ஒளி மங்கியதும், வருந்தத்தக்க நிலையி லுள்ளதுமான சந்திரபிம்பம்போல், இதயத்தின் உள்ளே உள்ள கவலையால் தளர்ந்த உன் முகம் நன்கு விளங்கவில்லையே! 28

तादृशे पितरि राजति कामं तावके कथय का तव हानिः ।
तात जल्प वद वत्सक सद्यः कारये तव मनोरथमेनम् ॥

*அத்தகைய உன் தந்தை விளங்கிக்கொண்டிருக்கும்போது உனக்கு என்ன குறை? குழந்தாய் பேசு! சிறுவனே! சொல்! உடன் உன் ஆசையைச் செய்து வைக்கிறேன்.* 29

तात तावकमनोरथपूर्तेर्नान्यदस्ति लषितं मम किञ्चित् ।
यादृशं भवति तादृशमास्तां जल्पितुं मयि च का तव शंका ॥

*குழந்தாய்! உன் ஆசை நிறைவேறுவதைவிட வேறு எனக்கு விருப்பமொன்றுமில்லை. அது எப்படியோ இருக்கட்டும். என்னிடம் சொல்வதற்கு ஏன் உனக்குக் கூச்சம்?* 30

द्विस्त्रिरुक्तपितृवत्सलभावं प्रेमगर्भमिति तत्र वदन्त्याम् ।
स ध्रुवः पितृकथार्दितचित्तश्चेतसा किमपि चिन्तयति स्म ॥

*இவ்வாறு இரண்டு மூன்று தடவைகளில் தந்தையின் அன்பைத் தெரிவித்தும் அன்புநிறைந்தும் தாய் பேசிக்கொண்டிருக்கும்போது துருவன் தந்தைபற்றிய பேச்சால் துளைக்கப்பட்ட மனத்தினனாக மனத்தால் எதனையோ நினைத்துக்கொண்டிருந்தான்.* 31

स्वाशयैकपरिपालनसज्जो भूपतिः किल यथा सुरुचौ सः ।
इत्थमेव जननी बत साध्वी मन्यते स्वविषयेऽपि नृपालम् ॥

*ஸுருசியிடத்தில் அவள் கருத்தை நிறைவேற்றுவதில் தயாராக அரசர் இருப்பதுபோல் தன்விஷயத்திலும் அரசர் இருப்பாரெனத் தன் நல்ல தாய் நினைக்கிருளே.* 23

तादृशं सुरुचिचेष्टितमस्मिन् पश्यतापि मयि बाढमुदासे ।
तत्र वत्सलतया मयि कामं श्लाघते पितरमीदृशमेषा ॥

*என் விஷயத்தில் அத்தகைய ஸுருசியின் செயலைப் பார்த்தும் அவரால் நன்கு ஒட்டாதிருக்க முடிந்தது. அந்தத் தந்தையையும் என்னிடம் பிரியமுள்ளவரென இவள் சிலாகித்துப் பேசுகிருளே!* 33

हन्त यद्यदधिराजसभं मां पर्यभाषत पितुर्भवतः सा ।
तत्र चेद्वचनमेककमेषा संशृणोति पितरीतिमवेयात् ॥

விந்தை இது! அரசசபையில் தந்தை இருக்கும்போதே, அவள் என்னை என்னென்ன சொன்னாளோ, அதில் ஒரு வார்த்தையை யாவது இவள் கேட்டாளேயானால் தந்தையின் நிலையை அறிவாள். 34

इत्थमस्य हृदि चिन्तयतः प्राग्यद्यधायि सुरुचीजनकाभ्याम् ।
तातगौरवकथापरिदीप्तं तत्तदातनमिवाजनि दुःखम् ॥

முன் ஸுருசியும் தந்தையும் செய்ததை மனத்தில் எண்ணிக் கொண்டிருந்தவனுக்கு இப்போது தந்தையின் பெருமைபற்றிய பேச்சால் நன்கு தூண்டப்பட்டதாக அந்தத் துக்கம் அப்போதே ஏற்பட்டதுபோல் வெளிப்பட்டது. 35

बोधनाद्द्विगुणिते हृदि दुःखे जोषमस्य भवतोऽप्यवशेन ।
दीर्घनिश्वसितवायुरुदीतो बाष्पवर्षमुदितं घटते स्म ॥

இந்தத் தூண்டுதலால் மனத்தில் துக்கம் இருமடங்காக ஆனதும், இவன் மௌனமாயிருந்தாலும் இவனை மீறி வெளிக்கிளம்பிய பெரு மூச்சு கண்ணீர் மழைபெருகவிருப்பதை முன் அறிவித்தது. 36

आननम्रमुखमथो अतिदीर्घं निश्वसन्नमुचदश्रुझरं सः ।
दुःखमुद्गलति दुस्सहमेव प्रायशः प्रियजनस्य पुरस्तात् ॥

தலை குனிந்தவாறு மிகவும் நீண்டதாக மூச்சுவிடுபவனாக அவன் கண்ணீர் அருவியை வெளியிட்டான். அனேகமாக அன்புக்குரியவர் களின் எதிரில் துக்கம் அடக்கமுடியாதவாறு மீறிட்டெழுமல்லவா? 37

मातृभाषितसमेधितशोकज्वालया हृदि विलीय पतद्भिः ।
निष्ठुरैरिव विमातृवचोभिः मातुरंककमसिंचत बाष्पैः ॥

தாயின் பேச்சால் வளர்க்கப்பெற்ற சோக ஜ்வாலையால் உருகி விழுகின்றவையும் மாற்றாந்தாயின் கொடுஞ் சொற்கள் போன்றிருப் பவையுமான கண்ணீர்களால் தாயின் மடியை நனைத்தான். 38

दीर्घदीर्घमथ निश्वसितं तच्छृण्वती झटिति चोदितचक्षुः ।
उक्षितं निपतदश्रुभिरुष्णैः अंकदेशमपि तं विलुलोके ॥

அந்த மிகவும் நீண்ட பெருமூச்சைக் கேட்பவளாக உடன் பார்வையைச் செலுத்திய அந்தத் தாய் விழுந்துகொண்டிருக்கிற சூடான கண்ணீரால் நனைந்த தன்மடியையும் பார்த்தாள். 39

R. N. 30478/77—SAMSKRITA SRI—22-4-81
TN/TR/53 Dt. 1-10-80 S. S. P. TRICHY.



Printed by S. Naganathan, at Theni Printers, Trichy. Edited by Vaidya S. V. Radhakrishna Sastri and Published by A. Kuppuswamy, B. A., B. T., on behalf of the Samskrit Education Society, (Regd.) Trichy Branch : 9. Single Mall Street, Tiruchirapalli-620 002.